Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

# கந்தர் சஷ்டி கவசம்

கலைமகள் டிரேடர்ஸ்
5, பொன்னம்பல வாத்தியார் தெரு,
(கபாலீஸ்வரர் கோயில் எதிரில்)
மயிலாப்பூர், சென்னை—600004.
Ph.044-24953032 / 24613114
email - kalaimagaltraders@yahoo.co.in

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

முதல் பதிப்பு – 2004. ஒன்பதாம் பதிப்பு – 2007.
மறு அச்சு – 2008, 2009, 2010. 2011,2012
பதிப்பாளர்: கலைமகள் டிரேடர்ஸ்.
விலை: ரூ. 8.00

பொருளடக்கம். பக்கம்



CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


ஸ்ரீதேவராஜ சுவாமிகள் அருளிய

# கந்தர் சஷ்டி கவசம்

காப்பு – நேரிசை வெண்பா

துதிப்போர்க்கு வல்வினைபோம்
துன்பம்போம்நெஞ்சில்
பதிப்போர்க்கு செல்வம் பலித்துக் —கதித்தோங்கும்
நிஷ்டையுங் கைகூடும் நிமலர் அருள் கந்தர்
சஷ்டி கவசந் தனை.

குறள் வெண்பா

அமரர்இடர் தீர அமரம் புரிந்த
குமரன் அடி நெஞ்சே குறி.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


நூல் - நிலைமண்டில ஆசிரியப்பா

சஷ்டியை நோக்கச் சரவண பவனார்
சிஷ்டருக்குதவும் செங்கதிர் வேலோன்
பாதம் இரண்டில் பன்மணிச் சதங்கை
கீதம் பாடக் கிண் கிணியாட
மையல் நடஞ்செயும் மயில் வாகனனார்

கையில் வேலால் எனைக்காக்க என்றுஉவந்து
வரவர வேலா யுதனார் வருக
வருக வருக மயிலோன் வருக
இந்திரன் முதலா எண்திசை போற்ற
மந்திர வடிவேல் வருக வருக

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

வாசவன் மருகா வருக வருக
நேசக் குறமகள் நினைவோன் வருக
ஆறுமுகம் படைத்த ஐயா வருக
நீறிடும் வேலவன் நித்தம் வருக
சிரகிரி வேலவன் சீக்கிரம் வருக

சரவண பவனார் சடுதியில் வருக
ரஹண பவச ரரரர ரரர
ரிஹண பவச ரிரிரிரி ரிரிரி
விணபவ சரவண வீரா நமோ நம
நிபவ சரவண நிற நிற நிறென

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வசர ஹணப வருக வருக
அசுரர் குடிகெடுத்த ஐயா வருக
என்னை ஆளும் இளையோன் கையில்
பன்னிரண்டு ஆயுதம் பாசாங் குசமும்
பரந்த விழிகள் பன்னிரண்டு இலங்க

விரைந்தெனை காக்க வேலோன் வருக
ஐயும் கிலியும் அடைவுடன் சௌவும்
உய்யொளி சௌவும் உயர்ஐயுங் கிலியும்
கிலியுஞ் சௌவும் கிளரொளி ஐயும்
நிலைபெற்று என்முன் நித்தமும் ஒளிரும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


சண்முகன் தீயும் தனி ஒளி யொவ்வும்
குண்டலியாம் சிவகுகன் தினம் வருக
ஆறு முகமும் அணி முடி ஆறும்
நீறு இடு நெற்றியும் நீண்ட புருவமும்
பன்னிரு கண்ணும் பவளச் செவ்வாயும்

நன்னெறி நெற்றியில் நவமணிச் சுட்டியும்
ஈராறு செவியில் இலகு குண்டலமும்
ஆறு இரு திண்புயத்து அழகிய மார்பில்
பல் பூஷணமும் பதக்கமும் தரித்து
நன்மணி பூண்ட நவரத்ன மாலையும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



முப்புரி நூலும் முத்து அணி மார்பும்
செப்பழகுடைய திருவயிறுந்தியும்
துவண்ட மருங்கில் சுடரொளிப் பட்டும்
நவரத்னம் பதித்த நற்சீராவும்
இருதொடைஅழகும் இணை முழந்தாளும்

திருவடி யதனில் சிலம் பொலி முழங்க
செககண செககண செககண செகண
மொகமொக மொகமொக மொகமொக மொகென
நகநக நகநக நகநக நகென
டிகுகுண டிகுடிகு டிகுகுண டிகுண

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ரரரர ரரரர ரரரர ரரர
ரிரிரிரி ரிரிரிரி ரிரிரிரி ரிரிரி
டுடுடு டுடுடு டுடுடு டுடு
டகுடகு டிகுடிகு டங்கு டிங்குகு
விந்து விந்து மயிலோன் விந்து

முந்து முந்து முருகவேள் முந்து
என்றனை ஆளும் ஏரகச் செல்வ
மைந்தன் வேண்டும் வரமகிழ்ந்து உதவும்
லாலா லாலா லாலா வேசமும்
லீலா லீலா லீலா விநோதன் என்று

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உன்திருவடியை உறுதியென்று எண்ணும்
என்தலை வைத்து உன் இணையடி காக்க
என்னுயிர்க் குயிராம் இறைவன் காக்க
பன்னிரு விழியால் பாலனைக் காக்க
அடியேன் வதனம் அழகுவேல் காக்க

பொடிபுனைநெற்றியைப் புனிதவேல்காக்க
கதிர்வேல்இரண்டு கண்ணினைக் காக்க
விதிசெவி இரண்டும் வேலவர் காக்க
நாசிகள் இரண்டும் நல்வேல் காக்க
பேசிய வாய்தனைப் பெருவேல் காக்க

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


முப்பத் திருபல் முனைவேல் காக்க
செப்பிய நாவைச் செவ்வேல் காக்க
கன்னம் இரண்டும் கதிர்வேல் காக்க
என் இளங் கழுத்தை இனிய வேல் காக்க
மார்பை இரத்ன வடிவேல் காக்க

சேர்இள முலைமார் திருவேல் காக்க
வடிவேல் இருதோள் வளம்பெறக் காக்க
பிடரிகள் இரண்டும் பெருவேல் காக்க
அழகுடன் முதுகை அருள்வேல் காக்க
பழு பதினாறும் பருவேல் காக்க

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



வெற்றிவேல் வயிற்றை விளங்கவே காக்க
சிற்றிடை அழகுறச் செவ்வேல் காக்க
நாண் ஆம் கயிற்றை நல்வேல் காக்க
ஆண்பெண்குறிகளை அயில்வேல் காக்க
பிட்டம் இரண்டும் பெருவேல் காக்க

வட்டக் குதத்தை வல்வேல் காக்க
பணைத்தொடைஇரண்டும் பருவேல்காக்க
கணைக்கால் முழந்தாள் கதிர்வேல் காக்க
ஐவிரல் அடியிணை அருள்வேல் காக்க
கைகள் இரண்டும் கருணைவேல் காக்க

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


முன்கை இரண்டும் முரண்வேல் காக்க
பின்கை இரண்டும் பின்னவள் இருக்க
நாவில் சரஸ்வதி நற்றுணை யாக
நாபிக் கமலம் நல்வேல் காக்க
முப்பால் நாடியை முனைவேல் காக்க

எப்பொழுதும் எனை எதிர்வேல் காக்க
அடியேன் வசனம் அசைவுள நேரம்
கடுகவே வந்து கனகவேல் காக்க
வரும்பகல் தன்னில் வச்சிரவேல் காக்க
அரைஇருள்தன்னில் அனையவேல்காக்க

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


ஏமத்தில் சாமத்தில் எதிர்வேல் காக்க
தாமதம் நீக்கிச் சதுர்வேல் காக்க
காக்க காக்க கனகவேல் காக்க
நோக்க நோக்க நொடியில் நோக்க
தாக்கத் தாக்கத் தடையறத் தாக்க

பார்க்கப் பார்க்கப் பாவம் பொடிபட
பில்லி சூனியம் பெரும்பகை அகல
வல்ல பூதம் வலாஷ்டிகப் பேய்கள்
அல்லல் படுத்தும் அடங்கா முனியும்
பிள்ளைகள்தின்னும் புழைக்கடைமுனியும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


கொள்ளிவாய்ப்பேய்களும் குறளைப் பேய்களும்
பெண்களைத் தொடரும் பிரம ராட்சதரும்
அடியனைக் கண்டால் அலறிக் கலங்கிட
இரிசி காட்டேரி இத்துன்ப சேனையும்
எல்லிலும்இருட்டிலும் எதிர்ப்படும் அண்ணரும்

கனபூசைகொள்ளும் காளியோடு அனைவரும்
விட்டாங் காரரும் மிகுபல பேய்களும்
தண்டியக் காரரும் சண்டாளர்களும்
என்பெயர் சொல்லவும் இடிவிழுந்தோடிட
ஆனை அடியினில் அரும்பாவைகளும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


பூனை மயிரும் பிள்ளைகள் என்பும்
நகமும் மயிரும் நீள் முடி மண்டையும்
பாவைகள் உடனே பலகல சத்துடன்
மனையில் புதைத்த வஞ்சனை தனையும்
ஒட்டிய செருக்கும் ஒட்டியப் பாவையும்

காசும் பணமும் காவுடன் சோறும்
ஓதும் அஞ்சனமும் ஒருவழிப் போக்கும்
அடியனைக் கண்டால் அலைந்து குலைந்திட
மாற்றான் வஞ்சகர் வந்து வணங்கிட
கால தூதாள் எனைக் கண்டால் கலங்கிட

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


அஞ்சி நடுங்கிட அரண்டு புரண்டிட
வாய்விட்டு அலறி மதிகெட்டு ஓடப்
படியினில் முட்டப் பாசக் கயிற்றால்
கட்டுடன் அங்கம் கதறிடக் கட்டு
கட்டி உருட்டு கால்கை முறியக்

கட்டு கட்டு கதறிடக் கட்டு
முட்டு முட்டு முழிகள் பிதுங்கிட
செக்கு செக்குச் செதில் செதிலாக
சொக்கு சொக்கு சூர்ப்பகைச் சொக்கு
குத்து குத்து கூர்வடி வேலால்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பற்று பற்று பகலவன் தணல்எரி
தணல்எரி தணல்எரி தணல்அது ஆக
விடுவிடு வேலை வெருண்டது ஓட
புலியும் நரியும் புன்நரி நாயும்
எலியும் கரடியும் இனித்தொடர்ந் தோடத்

தேளும் பாம்பும் செய்யான் பூரான்
கடிவிட விஷங்கள் கடித்து உயர் அங்கம்
ஏறிய விஷங்கள் எளிதுடன் இறங்க
ஒளிப்பும் சுளுக்கும் ஒருதலை நோயும்
வாதம் சயித்தியம் வலிப்புப் பித்தம்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


சூலைசயம் குன்மம் சொக்குச் சிரங்கு
குடைச்சல் சிலந்தி குடல்விப்புருதி
பக்கப் பிளவை படர் தொடை வாழை
கடுவன் படுவன் கைத்தாள் சிலந்தி
பற்குத்தரணை பரு அரையாப்பும்

எல்லாப் பிணியும் என்றனைக் கண்டால்
நில்லாதோட நீஎனக்கு அருள்வாய்
ஈரேழ் உலகமும் எனக்கு உறவாக
ஆணும்பெண்ணும் அனைவரும் எனக்கா
மண்ணாள்அரசரும் மகிழ்ந்துஉறவாகவும்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



உன்னைத் துதிக்க உன் திருநாமம்
சரவண பவனே சையொளி பவனே
திரிபுர பவனே திகழொளி பவனே
பரிபுர பவனே பவமொழி பவனே
அரிதிரு மருகா அமரா பதியைக்

காத்துத்தேவர்கள் கடுஞ்சிறை விடுத்தாய்
கந்தா குகனே கதிர் வேலவனே
கார்த்திகை மைந்தா கடம்பா கடம்பனை
இடும்பனை அழித்த இனியவேல் முருகா
தணிகாசலனே சங்கரன் புதல்வா

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



கதிர் காமத்து உறை கதிர்வேல் முருகா
பழநிப் பதிவாழ் பால குமாரா
ஆவினன்குடி வாழ் அழகிய வேலா
செந்தின்மா மலையுறும் செங்கல்வ ராயா
சமரா புரிவாழ் சண்முகத்து அரசே

காரார் குழலாள் கலைமகள் நன்றாய்
என்நா இருக்க் யான் உனைப் பாட
எனைத்தொடர்ந்திருக்கும் எந்தை முருகனைப்
பாடினேன் ஆடினேன் பரவசம் ஆக
ஆடினேன் ஆடினேன் ஆவினன் பூதியை

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நேசமுடன் யான் நெற்றியில் அணியப்
பாச வினைகள் பற்றது நீங்கி
உன்பதம் பெறவே உன் அருள் ஆக
அன்புடன்இரட்சி அன்னமும்சொன்னமும்
மெத்த மெத்தாக வேலா யுதனார்

சித்திபெற்று அடியேன் சிறப்புடன் வாழ்க
வாழ்க வாழ்க மயிலோன் வாழ்க
வாழ்க வாழ்க வடிவேல் வாழ்க
வாழ்க வாழ்க மலைக்குரு வாழ்க
வாழ்க வாழ்க மலைக்குற மகளுடன்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


வாழ்க வாழ்க வாரணத் துவசம்
வாழ்க வாழ்க என் வறுமைகள் நீங்க
எத்தனை குறைகள் எத்தனை பிழைகள்
எத்தனை அடியேன் எத்தனை செயினும்
பெற்றவன் நீகுரு பொறுப்பது உன் கடன்

பெற்றவள் குறமகள் பெற்றவ ளாமே
பிள்ளையென்று அன்பாய்ப் பிரியம் அளித்து
மைந்தன்என் மீதுன் மனம்மகிழ்ந்து அருளித்
தஞ்சமென்றுஅடியார் தழைத்திட அருள்செய்
கந்தர் சஷ்டி கவசம் விரும்பிய

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


பாலன் தேவ ராயன் பகர்ந்ததைக்
காலையில் மாலையில் கருத்துடன் நாளும்
ஆசாரத்துடன் அங்கம் துலக்கி
நேசமுடன் ஒரு நினைவது ஆகிக்
கந்தர் சஷ்டி கவசம் இதனைச்

சிந்தை கலங்காது தியானிப் பவர்கள்
ஒருநாள் முப்பத் தாறுருக் கொண்டு
ஓதியே ஜெபித்து உகந்து நீறு அணிய
அஷ்டதிக்குள்ளோர் அடங்கலும்வசமாய்த்
திசைமன்னர் எண்மர் சேர்ந்தங்கு அருளுவர்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


மாற்றலர் எல்லாம் வந்து வணங்குவர்
நவகோள் மகிழ்ந்து நன்மை அளித்திடும்
நவமதன் எனவும் நல்எழில் பெறுவர்
எந்த நாளும் ஈரெட்டாய் வாழ்வர்
கந்தர்கை வேலாம் கவசத்து அடியை

வழியாய்க் காண மெய்யாய் விளங்கும்
விழியால் காண வெருண்டிடும் பேய்கள்
பொல்லாதவரைப் பொடிப்பொடி யாக்கும்
நல்லோர் நினைவில் நடனம் புரியும்
சர்வ சத்துரு சங்காரத்தடி

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



அறிந்தெனதுள்ளம் அஷ்ட லட்சுமிகளில்
வீர லட்சுமிக்கு விருந்துணவாகச்
சூர பத்மாவைத் துணித்தகை யதனால்
இருபத்தேழ்வர்க்கு உவந்து அமுது அளித்த
குருபரன் பழநிக் குன்றினில் இருக்கும்

சின்னக் குழந்தை சேவடி போற்றி
எனைத் தடுத்தாட்கொள என்றனதுள்ளம்
மேவிய வடிவுறும் வேலவா போற்றி
தேவர்கள் சேனா பதியே போற்றி
குறமகள் மனமகிழ் கோவே போற்றி

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



திறமிகு திவ்விய தேகா போற்றி
இடும்பா யுதனே இடும்பா போற்றி
கடம்பா போற்றி கந்தா போற்றி
வெட்சி புனையும் வேளே போற்றி
உயர்கிரி கனக சபைக்கு ஓர் அரசே

மயில் நடமிடுவோய் மலரடி சரணம்
சரணம் சரணம் சரவண பவஓம்
சரணம் சரணம் சண்முகா சரணம்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


பாம்பன் சுவாமிகள் அருளிய

# சண்முக கவசம்

அண்டமாய் அவனி யாகி அறியொணாப்
பொருள தாகித் தொண்டர்கள் குருவு மாகித்
துகளறு தெய்வ மாகி எண்திசை போற்ற நின்ற
என்னருள் ஈசனான திண்திறல் சரவணத்தான்
தினமுமென் சிரசைக் காக்க. 1

ஆதியாங் கயிலைச் செல்வன்
அணிநெற்றிதன்னைக் காக்க
தாதவிழ் கடப்பந் தாரான்
தானிரு நுதலைக் காக்க

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


சோதியாந் தணிகை ஈசன்
துரிசிலா விழியைக் காக்க
நாதனாங் கார்த்தி கேயன்
நாசியை நயந்து காக்க 2

இருசெவி களையுஞ் செவ்வேள்
இயல்புடன் காக்க வாயை
முருகவேள் காக்க நாப்பல்
முழுதுநற் குமரன் காக்க
துரிசறு கதுப்பை யானைத்
துண்டனார் துணைவன்காக்க
திருவுடன் பிடரி தன்னை
சிவசுப்ர மணியன் காக்க 3

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஈசனாம் வாகு லேயன்
　　எனதுகந் தரத்தைக் காக்க
தேசுறு தோள்வி லாவுந்
　　திருமகள் மருகன் காக்க
ஆசிலா மார்பை ஈராறு
　　ஆயுதன் காக்க என்றன்
ஏசிலா முழங்கை தன்னை
　　எழிற்குறிஞ் சிக்கோன் காக்க　　4

உறுதியாய் முன்கை தன்னை
　　உமையிள மதலை காக்க
தறுகண் ஏறிடவே என்கைத்
　　தலத்தைமா முருகன் காக்க

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


புறங்கையை அயிலோன் காக்க
பொறிக்கர விரல்கள் பத்தும்
பிறங்குமால் மருகன் காக்க
பின்முது கைச்சேய் காக்க 5

ஊண்நிறை வயிற்றை மஞ்சை
ஊர்தியோன் காக்க வம்புத்
தோள்நிமிர் சுரேசன்உந்திச்
சுழியினைக் காக்க குய்ய
நாணினை அங்கிகௌரி
நந்தனன் காக்க பீஜ
ஆணியைக் கந்தன் காக்க
அறுமுகன் குதத்தைக் காக்க 6

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



எஞ்சிடாது இடுப்பை வேலுக்கு
இறைவனார் காக்க காக்க
அஞ்சுக னம்ஙரி ரண்டும்
அரன்மகன் காக்க காக்க
விஞ்சிடு பொருள்காங் கேயன்
விளரடித் தொடையைக் காக்க
செஞ்சரண் நேச ஆசான்
திமிருமுன் தொடையைக் காக்க 7
ஏரகத் தேவன் என்தாள்
இருமுழங் காலும் காக்க
சீருடைக் கணைக்கால் தன்னைச்
சீரலை வாய்த்தே காக்க

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நேருடைப் பரடி ரண்டும்
நிகழ்பரங் கிரியன் காக்க
சீரிய குதிக்கால் தன்னைச்
திருச்சோலை மலையன் காக்க 8

ஐயுரு மலையன் பாதத்து
அமர்பத்து விரலுங் காக்க
பையுறு பழநி நாத
பரன் அகங் காலைக் காக்க
மெய்யுடல் முழுது மாதி
விமலசண் முகவன் காக்க
தெய்வ நாயக விசாகன்
தினமும்என் நெஞ்சைக் காக்க 9

CC-0. In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


ஒலியெழ உரத்த சத்தத்
தொடுவரு பூதப்ரேதம்
பலிகொள்இராக்க தப்பேய்
பலகணத்து எவை யானாலும்
கிலிகொள எனைவேல் காக்க
கெடுபரர் செய்யுஞ் சூன்யம்
வலியுள மந்த்ர தந்த்ரம்
வருத்திடாது அயில்வேல் காக்க 1C

ஓங்கிய சீற்ற மேகொண்டு
உவணிவில் வேல்சூ லங்கள்
தாங்கிய தண்ட மெக்கம்
தடிபரசு ஈட்டி யாதி

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



பாங்குடை ஆயு தங்கள்
பகைவரென் மேலே ஓச்சின்
தீங்குசெய் யாமல் என்னைத்
திருக்கைவேல் காக்க காக்க 11

ஔவியம் உளர்ஊன் உண்போர்
அசடர்பேய் அரக்கர் புல்லர்
தெவ்வர்கள் எவரா னாலும்
திடமுடன் எனைமற் கட்டத்
தவ்வியே வருவா ராயிற்
சராசரம் எலாம்பு ரக்குங்
கவ்வுடைச் சூர சண்டன்
கையயில் காக்க காக்க 12

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


கடுவிடப் பாந்தள் சிங்கம்
கரடிநாய் புலிமா யானை
கொடிய கோணாய் குரங்கு
கோலமார்ச் சாலஞ் சம்பு
நடையுடை எதனா லேனும்
நானிடர்ப் பட்டி டாமற்
சடிதியில் வடிவேல் காக்க
சானவிமுளைவேல் காக்க 13

ஙகரமே போல்த ழீஇ
ஞானவேல் காக்க வன்புள்
சிகரிதேள் நண்டுக்காலி
செய்யனே றாலப் பல்லி

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


நகமுடை யோந்தி பூரான்
நளிவண்டு புலியின் பூச்சி
உகமிசை இவையால் எற்கோர்
ஊறிலாது ஐவேல் காக்க 14

சலத்திலும் வன்மீ னேறு
தண்டுடைத் திருக்கை மற்றும்
நிலத்திலுஞ் சலத்தி லுந்தான்
நெடுந்துயர் தரற்கே யுள்ள
குலத்தினால் நான்வ ருத்தங்
கொண்டிடாது அவ்வவ் வேளை
பலத்துடன் இருந்து காக்க
பாவகி கூர்வேல் காக்க. 15

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஞமலியம் பரியன் கைவேல்
நவக்கிர கக்கோள் காக்க
சுமவிழி நோய்கள் தந்த
சூலையாக் கிராண ரோகம்
திமிர்கழல் வாதஞ் சோகை
சிரமடி கர்ண ரோகம்
எமையணு காம லேபன்
இருபுயன் சயவேல் காக்க. 16

டமருகத் தடிபோல் நைக்குந்
தலைஇடி கண்ட மாலை
குமுறுவிப் புருதி குன்மம்
குடல்வலி பீளை காசம்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நிமிரொணாது இருத்தும் வெட்டை
நீர்ப்பிர மேகம் எல்லாம்
எமையடை யாம லேகுன்று
எறிந்தவன் கைவேல் காக்க. 17

இணக்கமில் லாத பித்த
எரிவுமா சுரங்கள் கைகால்
முணக்கவே குறைக்குங் குஷ்டம்
மூலவெண் முளைதீ மந்தஞ்
சணத்திலே கொல்லுஞ் சன்னி
சாலமென்று அறையும் இந்தப்
பிணிக்குலம் எனையா ளாமற்
பெருஞ்சக்தி வடிவேல் காக்க. 18

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


தவனமா ரோகம் வாதஞ்
சயித்தியம் அரோச கம்மெய்
சுவறவே செய்யும் மூலச்
சூடிளைப் புடற்று விக்கல்
அவதிசெய் பேதி சீழ்நோய்
அண்டவா தங்கள் சூலை
எவையுமென் இடத்தெய் தாமல்
எம்பிரான் திணிவேல் காக்க. 19

நமைப்பறு கிரந்தி வீக்கம்
நணுகிடு பாண்டு சோபம்
அமர்த்திடு கருமை வெண்மை
ஆகுபல் தொழுநோய் கக்கல்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



இமைக்குமுன் உறுவ லிப்போடு
எழுபுடைப் பகந்த ராதி
இமைப்பொழுதேனும் என்னை
எய்தாமல் அருள்வேல் காக்க. 20

பல்லது கடித்து மீசை
படபடென்றே துடிக்கக்
கல்லினும் வலிய நெஞ்சங்
காட்டியே உருட்டி நோக்கி
எல்லினும் கரிய மேனி
எமபடர் வரினும் என்னை
ஒல்லையில் தார காரி
ஒம்ஜும் ரீம்வேல் காக்க. 21

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


மண்ணிலும் மரத்தின் மீதும்
மலையிலும் நெருப்பின் மீதும்
தண்ணிறை ஜலத்தின் மீதுஞ்
சாரிசெய் யூர்தி மீதும்
விண்ணிலும் பிலத்தின் உள்ளும்
வேறெந்த இடத்தும் என்னை
நண்ணிவந்து அருளார் சஷ்டி
நாதன்வேல் காக்க காக்க. 22

யகரமே போற்சூல் ஏந்து
நறும்புயன் வேல்முன் காக்க
அகரமே முதலாம் ஈராறு
அம்பகன் வேல்பின் காக்க

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


சகரமோடு ஆறும் ஆனோன்
தன்கைவேல் நடுவிற் காக்க
சிகரமின் தேவ மோலி
திகழைவேல் கீழ்மேல் காக்க. 23

ரஞ்சித மொழிதே வானை
நாயகன் வள்ளி பங்கன்
செஞ்சய வேல்கி ழக்கில்
திறமுடன் காக்க அங்கி
விஞ்சிடு திசையின் ஞான
வீரன்வேல் காக்க தெற்கில்
எஞ்சிடாக் கதிர்கா மத்தோன்
இகலுடைக் கரவேல் காக்க. 24

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



லகரமே போற்கா ளிங்கன்
நல்லுடல் நெளிய நின்று
தகரமர்த் தனமே செய்த
சங்கரி மருகன் கைவேல்
நிகழெனை நிருதி திக்கில்
நிலைபெறக் காக்க மேற்கில்
இகலயில் காக்க வாயு
வினிற்குகன் கதிர்வேல் காக்க. 25

வடதிசை தன்னில் ஈசன்
மகனருட் திருவேல் காக்க
விடையுடை ஈசன் திக்கில்
வேதபோ தகன்வேல் காக்க

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நடக்கையில் இருக்கு ஞான்றும்
நவில்கையில் நிமிர்கை யிற்கீழ்க்
கிடக்கையில் தூங்கு ஞான்றும்
கிரிதுளைத் துளவேல் காக்க. 26

இழந்துபோ காத வாழ்வை
ஈயுமுத் தையனார் கைவேல்
வழங்குநல் ஊணுண் போதும்
மால்விளை யாட்டின் போதும்
பழஞ்சுரர் போற்றும் பாதம்
பணிந்துநெஞ்சு அடக்கும் போதுஞ்
செழுங்குணத் தோடே காக்க
திடமுடன் மயிலுங் காக்க. 27

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


இளமையில் வாலி பத்தில்
ஏறிடுவயோதி கத்தில்
வளரறு முகச்சிவன்தான்
வந்தெனைக் காக்க காக்க
ஒளியெழு காலை முன்னெல்
ஓம்சிவ சாமி காக்க
தெளிநடு பிற்ப கல்கால்
சிவகுரு நாதன் காக்க. 28

இறகுடைக் கோழித் தோகைக்கு
இறைமுன்இ ராவிற் காக்க
திறலுடைச் சூர்ப்ப கைத்தே
திகழ்பின்இ ராவிற் காக்க.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



நறவுசேர தாள்சி லம்பன்
நடுநிசி தன்னில் காக்க
மறைதொழு குழகன் எங்கோன்
மாறாது காக்க காக்க. 29

இனமெனத் தொண்ட ரோடும்
இணக்கிடுஞ் செட்டி காக்க
தனிமையிற் கூட்டந் தன்னிற்
சரவண பவனார் காக்க
நனியனு பூதி சொன்ன
நாதர்கோன் காக்க இத்தைக்
கனிவொடு சொன்ன தாசன்
கடவுள்தான் காக்க வந்தே. 30

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


# பகைகடிதல்

திருவளர் சுடர் உருவே சிவைகரம் அமர் உருவே
அருமறை புகழ் உருவே அறவர்கள் தொழும் உருவே
இருள்தகும் ஒளியுருவே எனநினை எனதெதிரே
குருமுகன் முதல்மயிலே கொணர்தியுன் இறைவனையே.1.

மறைபுகழ் இறைமுனரே மறைமுதல் பகருருவே
பொறைமலி யுலகுருவே புனநடை தருமுருவே
இறையுள முகவுருவே எனநினை எனதெதிரே
குறைவறு திருமயிலே கொணர்தியுன் இறைவனையே.2.

இதரர்கள் பலர்பொரவே இவணுறை எனதெதிரே
மதிரவி பலவெனதேர் வளர்சர ணிடையெனமா

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


சதுரோடு வருமயிலே தடவரை அசைவுறவே
குதிதரும் ஒருமயிலே கொணர்தியுன் இறைவனையே.3.

பவநடை மனுடர்முனே படருறும் எனதெதிரே
நவமணி நுதலணியேர் நகைபல மிடறணிமால்
சிவணிய திருமயிலே தி:டனொடு நொடிவலமே
குவலயம் வருமயிலே கொணர்தியுன் இறைவனையே. 4.

அழகுறு மலர்முகனே அமரர்கள் பணிகுகனே
மழவுரு வுடையவனே மதிநனி பெரியவனே
இழவுஇலர் இறையவனே எனநினை எனதெதிரே
குழகது மிளிர்மயிலே கொணர்தியுன் இறைவனையே. 5.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


இணையறும் அறுமுகனே இதசசி மருமகனே
இணரணி புரள்புயனே எனநினை எனதெதிரே
கணபண அரவுரமே தலைவுற வெழுதருமோர்
குணமுறு மணிமயிலே கொணர்தியுன் இறைவனையே.6.

எளியஎன் இறைவகுகா யெனநினை எனதெதிரே
வெளிநிகழ் திரள்களைமீன் மிச்சினை யெனமிடைவான்
பளபள வெனமினுமா பலசிறை விரிதருநீள்
குளிர்மணி விழிமயிலே கொணர்தியுன் இறைவனையே.7.

இலகயில் மயில்முருகா எனநினை எனதெதிரே
பலபல களமணியே பலபல பதமணியே

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


கலகல கலவெனமா கவினொடு வருமயிலே
குலவிடு சிகைமயிலே கொணர்தியுன் இறைவனையே.8.

இகலறு சிவகுமரா எனநினை எனதெதிரே
சுகமுனி வராஎழிலார் சுரர்பலர் புகழ்செயவே
தொகுதொகு தொகுவெனவே சுரநட மிடுமயிலே
குகபதி யமர்மயிலே கொணர்தியுன் இறைவனையே. 9.

கருணைபெய் கனமுகிலே கடமுனி பணிமுதலே
அருணையன் அரனெனவே அகநினை யெனதெதிரே
மருமலர் அணிபலவே மருவிடு களமயிலே
குருபல அவிர்மயிலே கொணர்தியுன் இறைவனையே. 10.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



# குமாரஸ்தவம்

ஓம் ஷண்முக பதயே நமோ நம:
ஓம் ஷண்மத பதயே நமோ நம:
ஓம் ஷட்க்ரீவ பதயே நமோ நம:
ஓம் ஷட்க்ரீட பதயே நமோ நம:
ஓம் ஷட்கோண பதயே நமோ நம:
ஓம் ஷட்கோச பதயே நமோ நம:
ஓம் நவநிதி பதயே நமோ நம:
ஓம் சுபநிதி பதயே நமோ நம:
ஓம் நரபதி பதயே நமோ நம:
ஓம் ஸுரபதி பதயே நமோ நம:
ஓம் நடச்சிவ பதயே நமோ நம:
ஓம் ஷடாக்ஷர பதயே நமோ நம:

CC-0. In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஓம் கவிராஜ பதயே நமோ நம:
ஓம் தபராஜ பதயே நமோ நம:
ஓம் இஹபர பதயே நமோ நம:
ஓம் புகழ்முநி பதயே நமோ நம:
ஓம் ஜயஜய பதயே நமோ நம:
ஓம் நயநய பதயே நமோ நம:
ஓம் மஞ்சுள பதயே நமோ நம:
ஓம் குஞ்சரீ பதயே நமோ நம:
ஓம் வல்லீ பதயே நமோ நம:
ஓம் மல்ல பதயே நமோ நம:
ஓம் அஸ்த்ர பதயே நமோ நம:
ஓம் சஸ்த்ர பதயே நமோ நம:
ஓம் ஷஷ்டீ பதயே நமோநம:

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

ஓம் இஷ்டி பதயே நமோநம:
ஓம் அபேத பதயே நமோநம:
ஓம் ஸுபோத பதயே நமோநம:
ஓம் (வ்)வியூஹ பதயே நமோ நம:
ஓம் மயூர பதயே நமோ நம:
ஓம் பூத பதயே நமோ நம:
ஓம் வேத பதயே நமோ நம:
ஓம் புராண பதயே நமோ நம:
ஓம் (ப்)பிராண பதயே நமோ நம:
ஓம் பக்த பதயே நமோ நம:
ஓம் முக்த பதயே நமோ நம:
ஓம் அகார பதயே நமோ நம:
ஓம் உகார பதயே நமோ நம:

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஓம் மகார பதயே நமோ நம:
ஓம் விகாச பதயே நமோ நம:
ஓம் ஆதி பதயே நமோ நம:
ஓம் பூதி பதயே நமோ நம:
ஓம் அமார பதயே நமோ நம:
ஓம் குமார பதயே நமோ நம:

## முருகன் போற்றி வழிபாடு

ஓம் அப்பா போற்றி
ஓம் அரனே போற்றி
ஓம் அழகா போற்றி
ஓம் அருவே போற்றி
ஓம் உருவே போற்றி
ஓம் அபயா போற்றி
ஓம் அதிகா போற்றி

ஓம் அறுபடையோய் போற்றி
ஓம் அறுமுகத்தரசே போற்றி
ஓம் ஆதி போற்றி
ஓம் அனாதி போற்றி
ஓம் இச்சை போற்றி
ஓம் கிரியை போற்றி
ஓம் இறைவா போற்றி

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


ஓம் இளையோய் போற்றி
ஓம் ஈசா போற்றி
ஓம் நேசா போற்றி
ஓம் உத்தமா போற்றி
ஓம் உயிரே போற்றி
ஓம் உணர்வே போற்றி
ஓம் உமைபாலா போற்றி
ஓம் எளியோய் போற்றி
ஓம் எண்குணா போற்றி
ஓம் ஏகா போற்றி
ஓம் அனேகா போற்றி
ஓம் ஒலியே போற்றி
ஓம் சுடரொளியே போற்றி
ஓம் கந்தா போற்றி
ஓம் கடம்பா போற்றி

ஓம் கருணாமூர்த்தியே போற்றி
ஓம் காவலா போற்றி
ஓம் கார்த்திகேயா போற்றி
ஓம் குகனே போற்றி
ஓம் குமரா போற்றி
ஓம் குறவா போற்றி
ஓம் குன்றுதோர் நின்றாய் போற்றி
ஓம் சரவணா போற்றி
ஓம் சண்முகா போற்றி
ஓம் சர்வலோகா போற்றி
ஓம் சத்தியசீலா போற்றி
ஓம் சிட்டானே போற்றி
ஓம் சிவக்குமரா போற்றி

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஓம் சிவக்கொழுந்தே போற்றி
ஓம் சித்தி போற்றி
ஓம் முத்தி போற்றி
ஓம் தலைவா போற்றி
ஓம் தவப்புதல்வா போற்றி
ஓம் தணிகைமுருகா போற்றி
ஓம் சூரா போற்றி
ஓம் வீரா போற்றி
ஓம் சுப்ரமண்யா போற்றி
ஓம் செந்தமிழா போற்றி
ஓம் செங்கல்வராயா போற்றி
ஓம் சேவலா போற்றி
ஓம் சேனாதிபதியே போற்றி
ஓம் ஞானபண்டிதா போற்றி
ஓம் தூயோய் போற்றி
ஓம் துறையே போற்றி
ஓம் நடுவா போற்றி
ஓம் நல்லோய்போற்றி
ஓம் நாதா போற்றி
ஓம் போதா போற்றி
ஓம் நாவலா போற்றி
ஓம் பாவலா போற்றி
ஓம் நித்தியா போற்றி
ஓம் நிமலா போற்றி
ஓம் பொன்னே போற்றி
ஓம் பொருளே போற்றி
ஓம் புலவா போற்றி
ஓம் பூரணா போற்றி
ஓம் மன்னா போற்றி
ஓம் மயிலோய் போற்றி

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


ஓம் மறையே போற்றி
ஓம் மணக்கோலா போற்றி
ஓம் மாசிலாய் போற்றி
ஓம் மால்முருகா போற்றி
ஓம் முருகா போற்றி
ஓம் முதல்வா போற்றி
ஓம் முத்தையா போற்றி
ஓம் மூவர்க்கும்
மேலோய் போற்றி
ஓம் வரதா போற்றி
ஓம் விரதா போற்றி
ஓம் விவேகா போற்றி
ஓம் வித்தகா போற்றி
ஓம் விசாகா போற்றி
ஓம் விதியே போற்றி
ஓம் கதியே போற்றி
ஓம் விண்ணோர் தொழும்
விமல போற்றி
ஓம் குஞ்சரிமணாளாபோற்றி
ஓம் பரங்குன்றின் பரமா போற்றி
ஓம் சூரனைமாய்த்தோய்போற்றி
ஓம் செந்தில் செவ்வேலாபோற்றி
ஓம் ஆண்டியாய் நின்றாய்போற்றி
ஓம் ஆவினன் குடியோய்போற்றி
ஓம் ஏரகப் பெருமான் போற்றி
ஓம் எம்பிரான் குருவே போற்றி
ஓம் வள்ளி மணாளா போற்றி
ஓம் வளர் தணிகேசா போற்றி
ஓம் சோலையில் செல்வா போற்றி
ஓம் சுகமெலாம் தருவாய் போற்றி

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஓம் ஒழுக்கம் அருள்வாய் போற்றி
ஓம் உடல் நலம் தருவாய் போற்றி
ஓம் செறுக்கினை அறுப்பாய் போற்றி
ஓம் சினம்காமம் தவிர்ப்பாய் போற்றி
ஓம் அவாவினை அழிப்பாய் போற்றி
ஓம் அறம்பொருள் தருவாய் போற்றி
ஓம் அனைத்தும் நீயே போற்றி
ஓம் அருள்வாய் வள்ளி மணாளா போற்றி
ஓம் தேவசேனா சண்முகா போற்றி போற்றி போற்றியே.

## ஷண்முக காயத்ரீ

ஓம் தத்புருஷாய வித்மஹே
மஹாஸேனாய தீமஹி
தந்நஷ்ஷண்முக: ப்ரசோதயாத்.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

அருணகிரிநாதர் அருளிய

# திருப்புகழ்

## காப்புத் துதி

முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக்குருபர எனவோதும்

முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டதுகற்பித் திருவரு
முப்பத்துமு வர்க்கத் தமரரு மடிபேணப்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


பத்துத்தலை தத்தக் கணைதொடு
ஒற்றைக்கிரி மத்தைப் பொருதொரு
பட்டப்பகல் வட்டத் திகிரியி லிரவாகப்

பத்தற்கிர தத்தைக் கடவிய
பச்சைப்புயல் மெச்சத் தகுபொருள்
பக்ஷத்தொடு ரக்ஷித் தருள்வது மொருநாளே

தித்தித்தெய வொத்தப் பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப் பயிரவி
திக்கொட்கந டிக்கக் கழுகொடு கழுதாடத்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


ஒக்குப்பரி அட்டப் பயிரவர்
தொக்குத் தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத் த்ரிகடக எனவோதக்

கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப்புதை புக்குப் பிடியென முதுகூகை

கொட்புற்றெழ நட்பற் றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக் குலகிரி
குத்துப்பட வொத்துப் பொரவல பெருமாளே.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai


நாத விந்துக லாதீ நமோநம
வேத மந்த்ரசொ ரூபா நமோநம
ஞான பண்டித ஸாமீ நமோநம வெகுகோடி
நாம சம்புகு மாரா நமோநம
போக அந்தரி பாலா நமோநம
நாக பந்தம யூரா நமோநம பரசூரர்
சேத தண்டவி நோதா நமோநம
கீத கிண்கிணி பாதா நமோநம
தீர சம்ப்ரம வீரா நமோநம கிரிராஜ
தீப மங்கள ஜோதீ நமோநம
தூய அம்பல லீலா நமோநம
தேவ குஞ்சரி பாகா நமோநம அருள்தாராய்

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai



ஈத லும்பல கோலால பூசையும்
ஓத லுங்குண ஆசார நீதியும்
ஈர முங்குரு சீர்பாத சேவையு மறவாத
ஏழ்த லம்புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதே மநோகர
ராஜ கம்பீர நாடாளு நாயக வயலூரா
ஆத ரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல் கொண்ட.வ ரோடே முனாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி
ஆதி யந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர் நனாடதில்
ஆவி னன்குடிவாழ்வான தேவர்கள் பெருமாளே.

CC-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Academy,

Vaidika Pandit Sri V Hariharan Collection, Sholinganallur, Chennai

"இலை, புஷ்பம்,
பழம், தண்ணீர்,
இவை எதையேனும்
யார் பக்தியுடன்
சமர்பிக்கிறாரோ
அதில் நான்
திருப்தி அடைகிறேன்.
நேர்மையற்ற பக்தியை
நான் ஏற்பதில்லை."

கீதை.

Kalaimagal Traders
Chennai-4

Kandhar Shasti Kavacham

-0.In Public Domain. Digitization by Muthulakshmi Research Acader